13th September 1958]

(b) the number of draft notifications and draft declarations withdrawn after publication in the *Fort St. George Gazette* in 1958 so far; and

(c) the reasons therefor?

THE HON. SRI P. KAKKAN (a) Six, Sir.

(b) Nil.

(c) Does not arise.

SRI M. JAGANNATHAN : தலைவர் அவர்களே, தென்னாற்காடு ஜில்லா க்ஷேமநல அதிகாரியால் ஹரிஜனங்களுக்கு வீட்டு மனைகள் ஆர்ஜிதம் செய்து வழங்கப்படும் விஷயத்தில் அதிகமான காலதாமதம் ஏற்பட்டுக்கொண்டு வருகிறது. அதை நிவர்த்தி செய்ய அரசாங்கம் துரிதமான நடவடிக்கை எடுத்துக் கொள்வார்களா ?

THE HON. SRI P. KAKKAN : நிலங்களை ஆர்ஜிதம் செய்வதில் அரசாங்கம் எல்லா நடவடிக்கைகளையும் எடுத்துக் கொண்டு வருகிறது என்கிற விஷயம் கனம் அங்கத்தினருக்குத் தெரியும். குறிப்பிட்ட நிகழ்ச்சி பற்றி காலதாமதமாகிறது என்பதாகச் சொன்னால் அதைப்பற்றி கவனிக்கிறேன்.

### *Bus Service*

* 209 Q—SRI N. R. THIAGARAJAN : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

மதுரை ஜில்லாவிலுள்ள காந்திகிராமத்திலிருந்து சின்னாளப்பட்டிக்கு ஒரு ஷட்டில் பஸ் ஸர்வீஸ் விட உத்தேசமுண்டா ?

THE HON. SRI V. RAMAIAH : No, Sir.

SRI N. R. THIAGARAJAN : சார், திண்டுக்கல்லில் இருந்து காந்தி கிராமம் வழியாக சின்னாளப்பட்டிக்கு ஷெட்டில் ஸர்வீஸ் விடுவதற்கு வசதி செய்யக்கூடாதா ? சின்னாளப்பட்டியும், காந்திகிராமமும் மிகப் பெரிதாகிக் கொண்டிருக்கிறதே ?

THE HON. SRI V. RAMAIAH : கேள்வி காந்திகிராமத்திற்கும், சின்னாளப்பட்டிக்கும் ஷெட்டில் சர்விஸ் விடுவதுபற்றி. இரண்டுக்கும் இடையில் 1.1 மைல்தான் இருக்கிறது. இதற்கு ஷெட்டில் சர்விஸ் போடவேண்டும் என்று சொல்வதன் மூலம் நம் நாட்டுப் பழக்கத்திற்கு ஊறு விளைவிக்க அங்கத்தினர் தூண்டுவதாகத் தெரிகிறது.

SRI N. R. THIAGARAJAN : நான் திண்டுக்கல்லுக்கும் சின்னாளப்பட்டிக்கும் காந்திகிராமம் வழியாக என்று கேள்வி கொடுத்திருந்தேன். தப்பாக அச்சேறியிருக்கிறது.

THE HON. SRI V. RAMAIAH : தப்பாக அச்சிடப்படவில்லை. அதில் பிழை ஒன்றும் கிடையாது. கனம் அங்கத்தினர் வேண்டுமானால் பிழையாகவே எழுதிக் கொடுத்திருக்கலாம்.

### *Municipal Commissioners*

* 210 Q.—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(a) the number of Harijan candidates who applied for selection as Municipal Commissioners in 1957–58; and

(b) the number selected?